පැරණි නිර්දේශය/பழைய பாடத்திட்டம்/Old Syllabus

OLD

ශ්‍රී ලංකා විභාග දෙපාර්තමේන්තුව
இலங்கைப் பரீட்சைத் திணைக்களம்
Department of Examinations, Sri Lanka

81 T I, II

අධ්‍යයන පොදු සහතික පත්‍ර (සාමාන්‍ය පෙළ) විභාගය, 2017 දෙසැම්බර්
கல்விப் பொதுத் தராதரப் பத்திர (சாதாரண தர)ப் பரீட்சை, 2017 டிசெம்பர்
General Certificate of Education (Ord. Level) Examination, December 2017

කෘෂිකර්මය හා ආහාර තාක්ෂණය I, II
விவசாயமும் உணவுத் தொழினுட்பவியலும் I, II
Agriculture and Food Technology I, II

පැය තුනයි
மூன்று மணித்தியாலம்
Three hours

## விவசாயமும் உணவுத் தொழினுட்பவியலும் I

**கவனிக்க :**

(i) எல்லா வினாக்களுக்கும் விடை எழுதுக.
(ii) **1** தொடக்கம் **40** வரையுள்ள வினாக்கள் ஒவ்வொன்றிலும் (1), (2), (3), (4) என இலக்கமிடப்பட்ட விடைகளில் **சரியான** அல்லது **மிகப் பொருத்தமான** விடையைத் தெரிவுசெய்க.
(iii) **உமக்கு வழங்கப்பட்டுள்ள விடைத்தாளில் ஒவ்வொரு வினாவுக்கும் உரிய வட்டங்களில் உமது விடையின் இலக்கத்தை ஒத்த வட்டத்தினுள்ளே புள்ளடியை (×) இடுக.**
(iv) அவ்விடைத்தாளின் மறுபக்கத்தில் தரப்பட்டுள்ள மற்றைய அறிவுறுத்தல்களையும் கவனமாக வாசித்து, பின்பற்றுக.

**1.** இலங்கையில் முதன்முதலில் ஆரம்பிக்கப்பட்ட பல்நோக்கு அபிவிருத்தித் திட்டம்,
(1) மகாவலி அபிவிருத்தித் திட்டமாகும். (2) நில்வளா கங்கை அபிவிருத்தித் திட்டமாகும்.
(3) கல்லோயா அபிவிருத்தித் திட்டமாகும். (4) மொரகஹகந்த அபிவிருத்தித் திட்டமாகும்.

**2.** குளமொன்றின் அணைக்கட்டுக்கு அலைகளினால் ஏற்படும் சேதத்தைத் தவிர்ப்பதற்கென நிருமாணிக்கப்பட்டுள்ள பகுதி,
(1) கலிங்கற்றொட்டி (2) கலிங்கல்
(3) அலைதாங்கி (4) சுருங்கை

**3.** ஈர - உலர்குமிழ் வெப்பமானியிலிருந்து பெறப்படும் வாசிப்புகளிலிருந்து துணியத்தக்க வானிலைப் பரமானம்,
(1) வளிமண்டல வெப்பநிலை (2) ஒளிச்செறிவு
(3) மழைவீழ்ச்சி (4) சாரீரப்பதன்

**4.** தாவரமூல (சைவ) உணவுகள் அடங்கிய வேளை உணவில் உடலுக்குப் புரதத்தை வழங்குவதற்கெனச் சேர்க்கப்பட வேண்டிய உணவு,
(1) உருளைக்கிழங்கு (2) கௌபி (காராமணிப்பயறு)
(3) கரட் (4) சோறு

**5.** தென்மேற் பருவப்பெயர்ச்சிக் காற்றின் மூலம் பிரதானமாக மழைவீழ்ச்சியைப் பெறுகின்ற மாவட்டங்களாவன,
(1) கொழும்பு, காலி, களுத்துறை (2) அனுராதபுரம், கண்டி, திருகோணமலை
(3) அனுராதபுரம், யாழ்ப்பாணம், முல்லைத்தீவு (4) மன்னார், வவுனியா, கொழும்பு

**6.** மண்ணின் பௌதிக இயல்புகளாக அமைவன,
(1) மண் இழையமைப்பும் மண் உவர்த்தன்மையும்
(2) மண் அமிலத்தன்மையும் மண் காரத்தன்மையும்
(3) கற்றயன் மாற்றீட்டுக் கொள்ளளவும் மண் இழையமைப்பும்
(4) மண் இழையமைப்பும் மண் கட்டமைப்பும்

**7.** பொலனறுவை, அனுராதபுரம், வவுனியா ஆகிய மாவட்டங்களில் அதிகளவில் பரந்து காணப்படும் மண் தொகுதி,
(1) செம்மஞ்சட் பொட்சோல் மண் (2) செங்கபில இலற்றசோல் மண்
(3) கல்சியமற்ற கபில மண் (4) செங்கபில மண்

**8.** பின்வரும் காரணிகளைக் கருதுக.

A - குத்துயரம்
B - பிரதேசத்திலுள்ள மண் வகை
C - மத்திய கோட்டிலிருந்தான தூரம்
D - பிரதேசத்திலுள்ள தாவர வர்க்கம்

இவற்றுள் குறித்த பிரதேசமொன்றின் வளிமண்டல வெப்பநிலையில் செல்வாக்குச் செலுத்தும் காரணிகளாவன,
(1) A, B, C ஆகியன மாத்திரம். (2) A, C, D ஆகியன மாத்திரம்.
(3) B, C, D ஆகியன மாத்திரம். (4) A, B, C, D ஆகியன எல்லாம்.

[பக். 2 ஐப் பார்க்க

**9.** 'ஆரம்பப் பண்படுத்தல்', 'இடைப் பண்படுத்தல்' ஆகிய இரண்டு நிலம் பண்படுத்தல் செயன்முறைகளுக்கும் பயன்படக்கூடிய உபகரணங்களாவன,
(1) சுழல் கலப்பையும் வட்டத்தட்டுக் கலப்பையும் (2) வட்டத்தட்டு ஹரோவும் மண்வெட்டியும்
(3) மண்வெட்டியும் முள் மண்வெட்டியும் (4) கைமுள்ளும் கைக்கரண்டியும்

**10.** கீழே A, B, C எனக் குறிப்பிடப்பட்ட வித்து வகைகள் மூன்றையும், அவற்றின் பருமனின் இறங்குவரிசைப்படி ஒழுங்கில் கொண்ட விடை,
A - முளைக்கீரை B - கத்தரி C - வெண்டி
(1) A, B, C (2) B, A, C (3) B, C, A (4) C, B, A

**11.** குக்கர்பீற்றேக் குடும்பத்தைச் சேர்ந்த தாவரங்களாவன,
(1) கௌபி, பயறு, போஞ்சி (2) சோளம், குரக்கன், நெல்
(3) பூசனி, புடோல், பாகல் (4) கத்தரி, மிளகாய், தக்காளி

**12.** தரைக்கீழ் வித்து முளைத்தலைக் கொண்ட பருப்பு வகைப் பயிர்,
(1) கடலை (2) பயறு (3) போஞ்சி (4) கௌபி

**13.** இஞ்சி, மஞ்சள் ஆகியவற்றைப் பயிரிடும்போது நடுகைப் பொருளாகப் பயன்படுத்தப்படுவது,
(1) குமிழ் (2) குமிழம்
(3) தண்டு முகிழ் (4) வேர்த்தண்டுக் கிழங்கு

**14.** உயர் நாற்றுமேடையின் நியம அகலம் சென்ரிமீற்றரில்
(1) 80 (2) 100 (3) 120 (4) 140

**15.** மண் உடலிலிருந்து மண் துணிக்கைகள் வேறாக்கப்படுதல், எடுத்துச் செல்லப்படல், வேறோர் இடத்தில் படிதல் என்பன,
(1) மண் கட்டமைப்பு எனப்படும். (2) மண்ணுருவாதல் எனப்படும்.
(3) மண்ணரிப்பு எனப்படும். (4) பாறைகள் வானிலையாலழிதல் எனப்படும்.

**16.** அமிலத்தன்மை கொண்ட மண்ணைச் சீர்செய்வதற்கு அம்மண்ணுக்கு இடப்பட வேண்டிய பதார்த்தம்,
(1) சுண்ணாம்புத் தூள் (2) சேதனப் பொருள்கள்
(3) எப்பாவல அப்பற்றைற்று (4) மாட்டெரு

**17.** பயிர்களின் வளர்ச்சிக்கு அத்தியாவசியமான நுண் போசணைகள் இரண்டுமாவன,
(1) Zn, Mn (2) C, N (3) Mg, K (4) Ca, S

**18.** தாவர இலைகளில் இலைச்சித்திர வடிவு ஏற்படல், இலைகளில் பச்சை நிறம் குன்றுதல், நரம்புகள் புடைத்தல், தாவரங்கள் குறளாதல் ஆகிய அறிகுறிகள் ஏற்படுவது,
(1) பங்கசுத் தொற்றுதலின் போதாகும். (2) பற்றீரியத் தொற்றுதலின் போதாகும்.
(3) வைரசுத் தொற்றுதலின் போதாகும். (4) வட்டப்புழுத் தொற்றுதலின் போதாகும்.

**19.** பூச்சிப்பீடைக் கட்டுப்பாட்டில் பயன்படுத்தப்படும் ஒழுங்கமைப்பொன்று கீழே உருவில் காட்டப்பட்டுள்ளது. இதன்மூலமாகக் கட்டுப்படுத்தப்படும் பீடை,
(1) ஏபிட்டு
(2) பழஈ
(3) அவுலக்கபோரா
(4) எப்பிலக்னா

**20.** சில தாவரங்களில் பூக்கள் உருவாவதில் பகற்கால நீளம் செல்வாக்குச் செலுத்தும். இந்தத் தோற்றப்பாடு,
(1) ஒளித்தொகுப்பு எனப்படும். (2) ஒளிக்காலத் தூண்டற்பேறு எனப்படும்.
(3) வசந்தகால நிலைப்படுத்தல் எனப்படும். (4) ஆவியுயிர்ப்பு எனப்படும்.

**21.** பின்வருவனவற்றில் அந்நிய ஆக்கிரமிப்புக் களை,
(1) குப்பைமேனி (2) கோரை (3) விடேலியா (4) ஆனையறுகு

**22.** பயிர்ச்செய்கையில் வைக்கோல், இலையுக்கல், உமி, தும்புத்தூள் ஆகியன மூடுபடையாகப் பயன்படுத்தப்பட்டு களைக்கட்டுப்பாடு மேற்கொள்ளப்படும். இங்கு களைகள் கட்டுப்படுத்தப்படுவது, களைகளின் வளர்ச்சிக்குத் தேவையான
(1) காற்றோட்டம் கிடைக்காமையாலாகும். (2) நீர் கிடைக்காமையாலாகும்.
(3) ஒளி கிடைக்காமையாலாகும். (4) போசணை கிடைக்காமையாலாகும்.

[பக். 3 ஐப் பார்க்க

**23.** அதிக காற்று வீசும் சாய்வான நிலத்தில் பயிர்ச்செய்கையை மேற்கொள்ளும்போது பயன்படுத்தப் பொருத்தமான நீர்ப்பாசன முறை,
(1) பரவல் பாசனம் (2) பாத்திப் பாசனம்
(3) தூவல் பாசனம் (4) துளிப் பாசனம்

**24.** பின்வருவனவற்றுள் சூழலுக்கு மிக உவப்பான உணவுப் பொதியிடு பதார்த்தம்
(1) பொலித்தீன் (2) பொலி புரொப்பலீன்
(3) கார்ட்போர்ட் (4) அடரிடப்பட்ட அலுமினியப் படலம்

**25.** பயிர்ச்செய்கையின்போது பரவலாகப் பயன்படுத்தப்படும், நீரில் நன்கு கரையும், செங்கட்டிச் சிவப்பு நிறமுடைய பளிங்குருவான இரசாயனப் பசளை வகை,
(1) யூரியா (2) எப்பாவல அப்பற்றைற்று
(3) மியூறியேற்றுப் பொட்டாசு (4) அமோனியம் சல்பேற்று

**26.** டபொக் நாற்றுமேடையிலிருந்து பெற்றுக்கொள்ளப்படும் நெல் நாற்றுகளை களத்தில் நாட்டப் பொருத்தமான வயது, நாட்களில்,
(1) 5 - 7 (2) 10 - 14 (3) 21 - 24 (4) 30 - 35

**27.** பயிர்கள் வளர்ச்சி குன்றிக் குட்டையாகக் காணப்படுவதற்கும் முதிர்ந்த இலைகள் மஞ்சள் நிறமாக மாறியிருப்பதற்கும் காரணமாக அமைவது எந்தத் தாவரப் போசணை மூலகக் குறைபாடாகும் ?
(1) நைதரசன் (2) பொசுபரசு (3) பொற்றாசியம் (4) கல்சியம்

**28.** தாவர மற்றும் விலங்குக் கழிவுகளைக் கூட்டெருவாக மாற்றுவதற்கு மிக உகந்த நிலைமைகளாக அமைவன,
(1) உலர்வானதும் அமிலத்தன்மையும்
(2) காற்றூட்டமும் ஈரலிப்பைக் கொண்ட நடுநிலையான தன்மையும்
(3) காற்றூட்டமும் அமிலத்தன்மையும்
(4) உலர்வானதும் நடுநிலையான தன்மையும்

**29.** பயிர்ச்செய்கையின்போது ஒவ்வொரு பயிருக்குமெனச் சிபாரிசு செய்யப்பட்ட இடைவெளி பேணப்படுவதற்கான காரணம்,
(1) ஒளி, நீர், போசணை ஆகியவற்றுக்குப் போட்டி ஏற்படுதலைக் குறைப்பதற்காகும்.
(2) மண்ணின் கற்றயன் மாற்றீட்டுக் கொள்ளளவை அதிகரிப்பதற்காகும்.
(3) பின்கண்காணிப்பு நடவடிக்கைகளை இலகுவாக்குவதற்காகும்.
(4) தாவரங்களில் நிகழும் ஆவியுயிர்ப்பைக் குறைப்பதற்காகும்.

**30.** உணவில் நிலவும் pH பெறுமானத்தை மாற்றியமைத்து நற்காப்புச் செய்யப்பட்ட உணவு,
(1) தயிர் (2) அச்சாறு (3) ஊறுகாய் (4) பழ ஜாம்

**31.** வளமற்ற மண்ணில் மேற்கொள்ளப்பட்டிருந்த உருளைக்கிழங்குச் செய்கையில், இலைகளின் ஓரங்கள் மஞ்சள் நிறமாகி பின்னர் அவை எரிந்தன போலக் காட்சியளித்தன. இதற்கான காரணமாக அமையத்தக்கது,
(1) நைதரசன் குறைபாடு (2) பொசுபரசுக் குறைபாடு
(3) பொட்டாசியக் குறைபாடு (4) மகனீசியக் குறைபாடு

**32.** பயிர்களுக்கு விரைவாகப் பொசுபரசினைக் கிடைக்கச் செய்வதற்கு இடப்பட வேண்டிய பசளை வகை
(1) பாறை பொசுப்பேற்று (2) எப்பாவல அப்பற்றைற்று
(3) மும்மை சுப்பர் பொசுபேற்று (4) கூட்டெரு

**33.** மண்ணின்றிய பயிர்ச்செய்கையில் பயன்படுத்தப்படும் நிலைக்குத்துப் பயிர்ச்செய்கை உறையினுள் இடுவதற்கு மிகப் பொருத்தமான நடுகை ஊடகம்,
(1) தும்புத் தூள் (தும்புச்சோறு) (2) தென்னந்தும்பு
(3) மென் மணல் (4) பேர்லைற்று

**34.** பௌதிக நிலப் பயன்பாட்டு வகைப்படுத்தலுக்கு அமைய இல. 1 என வகைப்படுத்தப்பட்டுள்ள நிலத்தில், பயிர்செய்வதற்குச் சிபாரிசு செய்யப்படுவது,
(1) நெல் (2) பெருந்தோட்டப் பயிர்
(3) காடுகள் (4) புல்

**35.** இலங்கையில் வளர்க்கத்தக்க இந்தியக் கறவைப் பசு வர்க்கம்,
(1) கிலாரி (2) ஜேர்சி (3) அயர்சயர் (4) சிந்தி

[பக். 4 ஐப் பார்க்க

36. பசுக்களின் உலர் காலம் பற்றிய பின்வரும் கூற்றுகளைக் கருதுக.

A - உலர் காலம் என்பது பசுவில் கன்றீனல் நிகழ முன்னர் பால் கறக்காது விடும் காலப் பகுதியாகும்.

B - பசுவின் நியம உலர் காலம் 60 நாட்களாகும்.

C - பசுவிற்கு வழங்கப்படும் உலர் காலம் காரணமாகத் தாய்ப்பசுவின் வயிற்றிலுள்ள கன்றின் வளர்ச்சி சீராக நடைபெறும்.

இவற்றுள் சரியானவை,

(1) A, B ஆகியன மாத்திரம். (2) A, C ஆகியன மாத்திரம்.
(3) B, C ஆகியன மாத்திரம். (4) A, B, C ஆகியன எல்லாம்.

37. புரற்றோசோவா காரணமாக கோழிகளுக்கு ஏற்படும் நோய்,

(1) புல்லோரம் (2) கொக்சிடியோசிசு (3) கம்போரா (4) ரணிக்கற்

38. பண்ணை விலங்குகளுக்கு வழங்கக்கூடிய உலர்நிலை ஐதுத்தீன்,

(1) சோளம் வித்து (2) தேங்காய்ப் பிண்ணாக்கு
(3) உலர் புல் (4) அரிசித் தவிடு

39. பின்வருவனவற்றுள் சரியான கூற்று யாது ?

(1) ஆழ்குளிரூட்டல் நிலைமையின் கீழ் இறைச்சி களஞ்சியப்படுத்தப்பட வேண்டிய வெப்பநிலை $^{-}18°$ C ஆகும்.
(2) பசுப்பாலை சிவிறி உலர்த்துவதன் மூலம் கிருமியழிக்கப்பட்ட பால் உற்பத்தி செய்யப்படும்.
(3) பாச்சராக்கம் செய்யப்பட்ட பால் தயாரிப்பின்போது நுண்ணங்கிகள் பயன்படுத்தப்படும்.
(4) யோகட் தயாரிப்பின்போது பாலை உறையச் செய்வதற்குப் பங்கசு பயன்படுத்தப்படும்.

40. கடும்புப்பால் பற்றிய கூற்றுகள் சில வருமாறு:

A - கடும்புப் பால் மலமிளக்கும் தன்மை கொண்டது.

B - கடும்புப் பாலைக் கொடுப்பதன் மூலம் கன்றுகளுக்கு நிர்ப்பீடனம் அதிகரிக்கும்.

C - கடும்புப் பால் கன்றுகள் குடிப்பதற்குப் பொருத்தமற்றதாகையால் கறந்து அகற்றப்பட வேண்டும்.

இவற்றுள் சரியான கூற்றுகளாவன,

(1) A, B ஆகியன மாத்திரம். (2) A, C ஆகியன மாத்திரம்.
(3) B, C ஆகியன மாத்திரம். (4) A, B, C ஆகியன எல்லாம்.

* *

[பக். 5 ஐப் பார்க்க

පැරණි නිර්දේශය/பழைய பாடத்திட்டம்/Old Syllabus

OLD

ශ්‍රී ලංකා විභාග දෙපාර්තමේන්තුව
இலங்கைப் பரீட்சைத் திணைக்களம்
Department of Examinations, Sri Lanka

81 T I, II

අධ්‍යයන පොදු සහතික පත්‍ර (සාමාන්‍ය පෙළ) විභාගය, 2017 දෙසැම්බර්
கல்விப் பொதுத் தராதரப் பத்திர (சாதாரண தர)ப் பரீட்சை, 2017 டிசெம்பர்
General Certificate of Education (Ord. Level) Examination, December 2017

කෘෂිකර්මය හා ආහාර තාක්ෂණය I, II
விவசாயமும் உணவுத் தொழினுட்பவியலும் I, II
Agriculture and Food Technology I, II

## விவசாயமும் உணவுத் தொழினுட்பவியலும் II

※ **முதலாம்** வினாவுக்கும் ஏனையவற்றுள் **நான்கு** வினாக்களுக்குமாக மொத்தம் **ஐந்து** வினாக்களுக்கு **மாத்திரம்** விடை எழுதுக.

**1.** பயிர்ச்செய்கை, கால்நடை வளர்ப்பு ஆகியவற்றிலிருந்து உச்ச உற்பத்தியைப் பெறுவதே விவசாயத்தின் நோக்கமாகும். இதற்கென ஆரம்பம் தொட்டு விளைச்சல்கள் சந்தைக்கு அனுப்பப்படும் வரை பயிர்ச்செய்கை மற்றும் கால்நடை வளர்ப்பு ஆகியன சரியாக முகாமை செய்யப்பட வேண்டும்.

(i) பயிர்ச்செய்கையின்போது மேற்கொள்ளப்படும் ஆரம்பப் பண்படுத்தல் நடவடிக்கைகளில் அடங்கும் கருமங்கள் **இரண்டைக்** குறிப்பிடுக.

(ii) இடைப்பண்படுத்தலின் நோக்கங்கள் **இரண்டை** எழுதுக.

(iii) பயிர்ச்செய்கையின்போது வித்துக்களை நாற்றுமேடையில் இட்டு வளர்த்து நாற்றுகளை நாட்டுவதன் மூலம் கிடைக்கும் அனுகூலங்கள் **இரண்டு** எழுதுக.

(iv) நாற்றுமேடை மண்ணைத் தொற்றுநீக்கும் முறைகள் **இரண்டு** தருக.

(v) பபேசியேக் குடும்பத்தைச் சேர்ந்த காய்கறிப் பயிர்கள் **இரண்டுக்கும்** குக்கர்பீற்றேசியேக் குடும்பத்தைச் சேர்ந்த காய்கறிப் பயிர்கள் **இரண்டுக்கும்** வெவ்வேறாக உதாரணங்கள் தருக.

(vi) வித்து உறங்குநிலையில் செல்வாக்குச் செலுத்தும் காரணிகள் **இரண்டு** எழுதுக.

(vii) பயிர்ச்செய்கையின்போது பயன்படுத்தப்படும் மேற்பரப்பு நீர்ப்பாசன முறைகள் **இரண்டைக்** குறிப்பிடுக.

(viii) உணவாகப் பயன்படுத்தப்படுகின்ற நிலக்கீழ்த் தண்டு வகைகள் **இரண்டைப்** பெயரிட்டு, அவ் ஒவ்வொரு நிலக்கீழ்த் தண்டு வகைப் பயிருக்கும் ஒவ்வோர் உதாரணம் தருக.

(ix) அடைவைப்பதற்குப் பொருத்தமான முட்டைகளில் காணப்பட வேண்டிய இயல்புகள் **இரண்டைக்** குறிப்பிடுக.

(x) பழங்களை நற்காப்புச் செய்யும் முறைகள் **இரண்டைக்** குறிப்பிடுக.

**2.** நீர், பயிர்ச்செய்கைக்கான இன்றியமையாத காரணியாக அமைவதுடன், முறையாக நீரை முகாமை செய்தல் மிக முக்கியமானதாகும்.

(i) பயிர்செய்கைக்கென நீர்ப்பாசன முறையொன்றைத் தெரிவுசெய்யும்போது கவனத்திற் கொள்ள வேண்டிய விடயங்கள் **மூன்றைக்** குறிப்பிடுக.

(ii) (a) மண்ணீர், மண்ணிலிருந்து இழக்கப்படும் முறைகள் **மூன்றைக்** குறிப்பிடுக.
(b) மண்ணீரைப் பாதுகாக்க மேற்கொள்ளத்தக்க நடவடிக்கைகள் **இரண்டு** எழுதுக.

(iii) விவசாய நிலங்களில் குறைவான நீர்வடிப்புக் காரணமாக ஏற்படக்கூடிய பிரச்சினைகள் **இரண்டைக்** குறிப்பிடுக.

**3.** பயிர்ச்செய்கையின்போது தாவரங்களுக்கு சீரான போசணையை வழங்கும் நோக்கில் இரசாயனப் பசளையும் சேதனப் பசளையும் இடப்படுகின்றன.

(i) தாவரத்தின் வளர்ச்சிக்கு இன்றியமையாத பெரும்போசணைப் பதார்த்தங்கள் **நான்கைக்** குறிப்பிடுக.

(ii) பயிர்களுக்கு இடப்படும் இரசாயனப் பசளையிலிருந்து உச்ச பயனைப் பெறுவதற்கு மேற்கொள்ளத்தக்க நடவடிக்கைகள் **மூன்றை** எழுதுக.

(iii) பயிர்ச்செய்கையின்போது இரசாயனப் பசளைக்குப் பதிலாக சேதனப் பசளைகளை இடுவதனால் கிடைக்கும் அனுகூலங்கள் **மூன்று** எழுதுக.

[பக். 6 ஐப் பார்க்க

**4.** பயிர்த் தாபிப்புக்கென வித்து மூலம் பெறப்பட்ட நாற்றுக்களும் பதியமுறை இனப்பெருக்கத்தின் மூலம் பெறப்பட்ட நாற்றுக்களும் பயன்படுத்தப்படுகின்றன.

(i) பதியமுறை இனப்பெருக்கத்தின் அனுகூலங்கள் **மூன்றைக்** குறிப்பிடுக.

(ii) நாட்டப்பட முன்னர் சில வித்துகள் வித்துப் பரிகரிப்புக்கு உட்படுத்தப்படும். பின்வரும் வித்துப் பரிகரிப்புகளுக்கான காரணங்களை விளக்குக.

(a) தக்காளி வித்துகளைச் சூழவுள்ள வழுவழுப்பான பதார்த்தம் கழுவி அகற்றப்படல்

(b) குரக்கன் வித்துகளை மணலுடன் கலத்தல்

(c) சோயா அவரை வித்துகளுக்கு 'நைதரசன் - S' பற்றீரியாவை உட்புகுத்தல்

(iii) காற்றுப் பதிவைத்தல் மூலமாக கிளையொன்றை வேர்விடச்செய்யும் முறையைப் பெயரிடப்பட்ட வரிப்படத்தின் உதவியுடன் விவரிக்குக.

**5.** பயிர்ச்செய்கையின்போது மண்ணீரும் மண் வளியும் பயிர்களுக்கு ஏற்றளவில் காணப்படுவது முக்கியமாகும்.

(i) மண்ணீர் மண்ணில் நிலவும் விதங்கள் **மூன்றைப்** பெயரிடுக.

(ii) பின்வரும் மண் ஈரலிப்பு மட்டங்களின்போது மண்ணில் காணப்படும் மண்ணீர் வகைகள் யாவை ?

(a) நிரம்பல் நிலை

(b) வயற்கொள்ளளவு நிலை

(c) நிரந்தர வாடல் நிலை

(iii) (a) பயிர்ச்செய்கையில் மண் வளியின் முக்கியத்துவங்கள் **இரண்டு** எழுதுக.

(b) மண் காற்றூட்டலை மேம்படுத்த மேற்கொள்ளத்தக்க நடவடிக்கைகள் **இரண்டைக்** குறிப்பிடுக.

**6.** பயிர்ச்செய்கையில் விளைச்சலின் அளவும் தரமும் குறைவதற்கான ஒரு காரணமாக பூச்சிப் பீடைத் தாக்கத்தை இனங்காணலாம்.

(i) (a) பயிர்களில் பின்வருமாறான நேரடிச் சேதங்களை ஏற்படுத்தும் பூச்சிகளுக்கான உதாரணங்கள் **இரண்டு** வீதம் குறிப்பிடுக.

(A) இழையங்களைக் கடித்து (மென்று) உண்ணுதல்

(B) இழையங்களைக் குத்திச் சாற்றைக் குடித்தல்

(b) இழையங்களைக் குத்திச் சாற்றை உறிஞ்சிக் குடிக்கும் பூச்சிகளால் பயிர்களுக்கு ஏற்படும் மறைமுக சேதமொன்றை எழுதுக.

(ii) பூச்சிப் பீடைக் கட்டுப்பாட்டின்போது பயன்படுத்தக்கூடிய **இரசாயனமல்லாத** கட்டுப்பாட்டு முறைகள் **நான்கை** எழுதுக.

(iii) இரசாயனப் பீடை நாசினிகளைப் பயன்படுத்தும்போது கைக்கொள்ளப்பட வேண்டிய பாதுகாப்பு முன்னேற்பாடுகள் **மூன்றை** எழுதுக.

**7.** கறவைப் பசு வளர்ப்பில் சுத்தமான பாலை உற்பத்தி செய்தல் மிக முக்கிமானதாகும்.

(i) சுத்தமான பாலுற்பத்திக்கெனக் கைக்கொள்ளப்பட வேண்டிய நடைமுறைகள் **நான்கு** எழுதுக.

(ii) (a) பசுவில் ஏற்படும் வேட்கை அறிகுறிகள் **இரண்டைக்** குறிப்பிடுக.

(b) மாட்டுக்கன்று பிறந்த முதல் நாளில் கன்றுக்குச் செய்ய வேண்டிய பராமரிப்புகள் **இரண்டு** எழுதுக.

(iii) பசுக்களுக்கு ஏற்படும் மடியழற்சி நோயின்,

(a) நோய்க்காரணி

(b) நோயறிகுறிகள்

(c) தவிர்க்கும் முறைகள்

ஆகியவற்றை எழுதுக.

* * *